## ❀ உடுத்துக்களைந்த ❀

| | |
|---|---|
| உடுத்து | திருவரையிலே சாத்தி |
| களைந்த | அவிழ்க்கப்பட்ட |
| நின் | தேவரீருடைய |
| பீதகவாடை | பீதாம்பரத்தை (ப்ரஸாதமாக) |
| உடுத்து | தரித்தும், |
| கலத்தது | தேவரீர் அமுது செய்த பாத்ரத்தில் மிகுந்ததை |
| உண்டு | புஜித்தும், |
| தொடுத்த | மாலையாகக் கட்டப்பட்டும் |
| சூடி | (திருமுடியிலே) சாத்தி |
| களைந்தன | கழிக்கப்பட்டு இருக்கிற |
| மலர் துழாய் | விகஸிதமான திருத்துழாயை |
| சூடும் | சிரஸ்ஸில் தரிக்குமவர்களான |
| இத்தொண்டர்களோம் | இப்படிப்பட்ட சேஷபூதரான நாங்கள், |
| விடுத்த | நியமித்து விடப்பட்ட |
| திசை | திக்குகளிலேயுண்டான |
| கருமம் | கார்யங்களை (எல்லாம்) |
| திருத்தி | குறைவறச்செய்து (அதுக்குமேலே) |
| திருவோணம் | ச்ரவண நக்ஷத்ரமென்கிற |
| திருவிழவில் | திருநாளிலே (அமங்களங்கள் தீரும்படி), |
| படுத்த | படுக்கப்பட்ட |
| பை | பரந்த படங்களையுடைய |
| நாகு அணை | திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே |
| பள்ளிகொண்டானுக்கு | கண்வளர்ந்தருளுமவன் விஷயமாக |
| பல்லாண்டு கூறுதும். | (௯) |

## ❀ எந்நாள் ❀

| | |
|---|---|
| எம்பெருமான் | வகுத்த சேஷியானவனே! |
| உன்றனக்கு | தேவரீருக்கு |
| அடியோம் | சேஷபூதர் |
| என்று | என்ற அர்த்தத்தைச் சொல்லுகிற |
| எழுத்து | ப்ரணவமாகிற அக்ஷரத்தில் (நாள்) |
| பட்ட | (நாங்கள்) ஸம்பந்தித்த |
| எந்நாள் | எந்த நாளோ, |
| அந்நாளே | அன்றைய தினமே |
| அடியோங்கள் | தாஸபூதரானோம், |
| குடில் | க்ருஹத்திலுண்டான புத்ர பௌத்ராதிகளும் |
| அடி | அடியாராய்க் கொண்டு |
| வீடுபெற்று | அஹங்கார மமகாரங்களை விட்டு |
| உய்ந்தது காண் | உஜ்ஜீவித்தார்கள் கிடீர். |
| செம் | அழகிய |
| நாள் | நாளிலே |
| தோற்றி | (க்ருஷ்ணனாக) திருவவதரித்து |
| திருமதுரையுள் | ஸ்ரீமதுராபுரியில் சென்று |
| சிலை | (கம்ஸனுடைய) வில்லை |
| குனித்து | வளைத்து (முறித்து), (அதுக்குமேலே), |
| ஐந்தலைய | ஐந்து தலைகளையுடையனுமான |
| பை | பரந்த படங்களையுடைய |
| நாகம் | பாம்பான காளியனுடைய |
| தலை | சிரஸ்ஸிலே |
| பாய்ந்தவனே | குதித்தவனே! |
| உன்னை | தேவரீர் விஷயமாக |
| பல்லாண்டு கூறுதும். | (௧௦) |

## ❀ அல்வழக்கு ❀

| | |
|---|---|
| திருமாலே | ஸ்ரிய:பதியான ஸர்வேச்வரனே! |
| பல்வகையாலும் | (ஸ்வரூபாதி) அநேகப்ரகாரத்தினாலும் |

பவித்ரனே — பரிசுத்தனே!
அல் — அல்லாத (விபரீதமான)
வழக்கு — ந்யாயங்களில்
ஒன்றும் — ஒருவிதமான அந்யாயமும்
இல்லா — இல்லாதவராய்,
அணி — பூமண்டலத்துக்கு அலங்காரமான
கோட்டியர் — திருக்கோட்டியூரிலுள்ளார்க்கு
கோன் — நிர்வாஹகராய்,
அபிமானம் — ஸ்ரீவைஷ்ணவாபிமானத்தாலே
துங்கன் — உயர்ந்தவ (பூர்ண) ரான
செல்வனைப்போல — செல்வநம்பியைப் போலே
நானும் — அந்யபரனானநானும்
உனக்கு — வகுத்தசேஷியான உனக்கு
பழ அடியேன் — அநாதியான சேஷபூதனுய்க்கொண்டு,
நல்வகையால் — நல்லப்ரகாரத்தினாலே (கேவலசப்தமாத்ர மன்றிக்கே அர்த்தாநுஸந்தாநபூர்வகமாக)
நமோநாராயணா என்று — எம்பெருமானுக்கே உரியேன் எனக்குரியேனல்லேன் என்கிற அர்த்தத்தைப்ரதிபாதிக்கிற
நாமம் — திருநாமத்தை
பல — பலதடவை
பரவி — சொல்லி
உன்னை — உன் விஷயமாக
பல்லாண்டு கூறுவன். (கக)

## பல்லாண்டென்று.

பவித்திரனை — (ஸர்வப்ரகாரத்தாலும்) பரிசுத்தனாய்
பரமேட்டியை — ஸர்வோத்தமமான பரமபதத்தில் எழுந்தருளியிருப்பவனாய்
சார்ங்கமென்னும் — சார்ங்கமென்று திருநாமமுடைய
வில் — தநுஸ்ஸை
ஆண்டான் தன்னை — ஆளுமவனுமான ஸ்ரீமந்நாராயணன் விஷயமாக,
வில்லிபுத்தூர் — ஸ்ரீவில்லிபுத்தூரிலே அவதரித்த
விட்டுசித்தன் — பெரியாழ்வார்
பல் ஆண்டு என்று — அநேககாலம் மங்களமுண்டாக வேணுமென்று
விரும்பிய — விருப்பத்துடனருளிச்செய்த
சொல் — ஸ்ரீஸூக்தியை,
நல் ஆண்டு என்று — (இதை அநுஸந்திக்கும்படியான) நல்லகாலம் (நேர்பட்டதே) என்று (கொண்டாடி)
நவின்றுஉரைப்பார் — பலகால்சொல்லுமவர்கள்
நமஃ — எனக்குரியேனல்லேன்
நாராயணாய — எம்பெருமானுக்கே உரியேன்
என்று — என்றுசொல்லிக்கொண்டு
பரமாத்மனை — ஸர்வாந்தர்யாமியான ஸர்வேஶ்வரனை
சூழ்ந்து இருந்து — சுற்றும் இருந்து
பல் ஆண்டும் — அநந்த காலங்களிலும்
பல்லாண்டு — பல்லாண்டு (என்றுபாடி)
ஏத்துவர் — ஸ்தோத்ரம் செய்வர்கள்!

திருப்பல்லாண்டு ப்ரதிபதம்

முடிந்தது.